சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 11]   சார்வரி-ஹூ கார்த்திகை-மீ 1-ம்உ (16-11-60)   [இதழ்

# ஆசிரியர் குழு



## உள்ளுறை



---

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# சந்தா நேயர்களுக்கு அறிவிப்பு



நூளிது மார்கழி மாதத்துடன் "குமரகுருபரன்" பதினெறு ஆண்டுகள் நிரம்பி, தைத்திங்கள் முதல்த் தேதி பன்னிரண்டாவது ஆண்டு எய்துகிருன். தங்களுடைய அன்பும் ஆதரவும் என்றென்றும் பெருகி நிற்கப் பெரிதும் விழைகின்ருன்.

சந்தாப் பாக்கியுள்ளவர்கள் பாக்கியை அனுப்புவதுடன் 1961-ம் வருடச் சந்தாவையும் சேர்த்து அனுப்பி குமரகுருபரன் வளர்ச்சிக்கு மென்மேலும் ஊக்கமளிக்க வேண்டுகின்றேன். சந்தாப் பாக்கியில்லாத நண்பர்கள் வழக்கம் போல் 1961-ம் வருடச் சந்தாவை முன் கூட்டியே அனுப்பித் தரவும் கேட்டுக் கொள்கிறேன்.

சந்தா நம்பர் குறிப்பிட்டு எழுதுவதும், முகவரி மாற்றம் உடனுக்குடன் தெரிவிப்பதும் காலதாமதத்தை அகற்றி அலுவலகத்தின் சேவையையும் துரிதப்படுத்தும். புதுச் சந்தாதார்கள் "புதிய சந்தா" என்ற விபரம் குறிப்பிட்டு எழுதுவது நலம்.

நிர்வாக ஆசிரியர்.

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை





மலர் 11 | சார்வரி-ஸு கார்த்திகை-மீ 1 ம்-உ (16-11-60) | இதழ் 11


# சிதம்பரச் செய்யுட் கோவை


தருமையாதீனம் முதுபெரும்புலவர்,
**மாணிக்கவாசகன்**
( முத்து. சு. )




[ கட்டுரை 40 ]

உயிர்கள் சிவகதியிற் சென்று திருவடியைப்பெறச் சிவபெருமான் தன் பெருங்கருணையால் வகுத்த வழி முத்திறத்தில் அடங்கும். அவை குருலிங்கஜங்கமம் ஆகும். குருவும் ஜங்கமமும் சித்தாகலின் ஒன்ருகக் கொள்ளலாம். ஆயினும் 'குருவே சிவம்' என்னும் உண்மையை நோக்கின், ஜங்கமத்தின் வேருகக் குருவை முதலில் வைத்து அதன் சிறப்புணரவும் உணர்த்தவும் வேண்டும் எனல் விளங்கும். இம் மூன்றனேயும் வழிபடாமல், எத்தனே பிறவி யெடுக்கினும் முத்திகிடைத்தல் அரிதாகும்.

" கற்று மனம்போற் கசிந்துகசிந் தேஉருகி
உற்றுசான் லிங்கம் உயர்வேடம் — பற்றுக
முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திதனில் நின்றிடுவர் பார்."

என்ற உண்மை விளக்கத்தின் திருவெண்பாவில், மலநீக்கம் புரியும் சிவபத்தி வளர்ச்சிக்கு ஆசானும் சிவலிங்கமும் சிவவேடமும் (ஜங்கமமும்) பற்றுகக் கொள்ளற்பாலன என்று உணர்த்தி யிருத்தல் காண்க. இம் மூன்றுமே முத்திக்கு அழியாத காரணம். இவற்றை வழிபடும் ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தோரே கருவேலையைக் கடப்பர். ஏனையோர் கருவாய்ப் பிறவிக்கடலில் விழுந்து கரையேறமாட்டார். இதனையும் அத் திருவெண்பா வின் முன்னதில் இனிது விளக்கியருளினர் மனவாசகங் கடந்தார்.

" அப்பாலும் முத்திக் கழியாத காரணந்தான்
செப்பாய் அருளாலே செப்பக்கேள் — ஒப்பில்
குருலிங்க வேடம்எனக் கூறில்இவை கொண்டார்
கருஒன்றி நில்லார்கள் காண்."

என்பது அது.

குருவழிபாடு, இலிங்கவழிபாடு, ஜங்கமவழிபாடு என்னும் முத்திறத்துள் ஏதேனும் ஒன்றே அமையும் எனல் ஆகாது. மூன்றும் இன்றி வீடுபெறல் இல்லை. இடறிய இடம் எல்லாம் இம் மூன்றனுள் ஒன்று எதிர்ப்பட்டால்தான் உயிர்க்குப் பாசச் சூழல் அடியோடு அறும். இம் மூன்றும் தொடர்ந்து இருந்து கொண்டேவரின், அப்பேறு வாய்ந்தவரே இம்மையிலே சிவன் முத்தராகி மலங்கழுவி ஞானவாரிமடுத்து ஆநந்தமே எய்திப் பிறப்பற்று முத்தாந்தப் பாதமலர்க்கீழ் நித்திய வாழ்வுறுவர்.

இம்மூன்றனிடத்தும் சிவபெருமானே வீற்றிருந்து, அன்பர் செய்யும் வழிபாட்டினை ஏற்றுக்கொண்டு திருவருள் புரிகின் ருன். சிவமே குரு. அக் குருவே சிவலிங்கத்திலிருந்து வழி படுவோர்க்கு அருள் செய்கின்ருர். நம் சமயாசாரியருள் திரு ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகள் மூவரும்

சிவலிங்கத்தின்பால் வீற்றிருந்து ஆட்கொண்ட குருவின் அருளைப்பெற்றவர்களே. இதனைத் 'தோடு கூற்றுப் பித்தா மூன்றும் பீடுடைத் தேசிகன் பேரருளாகும்' என்னும் முனிவருரையால் அறிக. அதன் விளக்கமாய், அகத்தியர் தேவாரத் திரட்டின் அமைப்பை உணர்த்தும் திருவெண்பாவும்,

"குருவருளும் வெண்ணீ றெழுத்தஞ்சும் கோயில்
அரனுருவும் என்தலைமேல் ஆக்கும் — திருவடியும்
சிட்டான அர்ச்சனையும் தொண்டும் சிவாலயர்க்கென்
றிட்டார் அகத்தியனார் எட்டு."

என்று முதலிற் குருவருளையே குறித்தது. சிலபதிப்புக்களுள் 'குருவடிவும்' 'குருவுருவும்' 'குருவுருவம்' என்றிருப்பது குற்றமே ஆகும். 'தோடுகூற்றுப் பித்தா மூன்றும் பீடுடைத் தேசிகன் பேரருளாகும்' என்றதற்கு அவை அனைத்தும் ஒவ்வாதன.

ஆவின் முலைபோற் சிவலிங்கம்; ஆவின்மேனிபோற் குரு; ஆவின்வாய் ஜங்கமம். ஆவின்பால் அதன் முலைவழியே கிடைக்கின்றமை கருதிப் புல்லை அம்முலைவழிப் புகுத்தின், ஏற்குமோ? உடல் அப்புல்லைக் கொள்ளுமோ? ஆவின் வாயுட் புல்லைக் கொளுத்துவதே இயல்பாகும். சிவலிங்கத்தே முத்தி கிடைப்பதாயினும் ஜங்கமத்தை முறைப்படி வழிபடுவோர்க்கே சிவானுபவம் எய்தும். இதனை ஓர் அரியபாடல் இனிதுணர்த்தலை அறிக.

"கோதனத்தின் முலையிலிங்கம்; குருவாம் மேனி;
கூறியஜங் கமம்முகமாம்; குலவும் கீரம்
போதமுலை பொழிந்திடும்என் றதற்கன் பாகப்
புல்அளிக்கின், அருந்தியிடா; உடலம் கொள்ளா;
நீதியினல் அருந்துமுகத் தளித்தால் எங்கும்
நிறைவாகும் முத்திசிவ லிங்கத் தேனும்
ஏதம்இல்ஜங் கமத்தைவழி படுவோர்க் கன்றி
எண்ணரிய சிவானுபவம் எய்தொ ணாதே."

ஜங்கமம், சிவவேடம் என்றும் வழங்கப்பெறும். சிவஞான சித்தியாரில்,

'தாபர சங்கமங்கள் என்றிரண் டுருவில் நின்று
மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் தருளைவைப்பன்'

என்றுளது. அதில் 'தாபரம்' சிவலிங்கம்.

"தழைத்ததோர் ஆத்தியின்கீழ்த் தாபரம் மணலாற்கூப்பி
அழைத்தங்கே ஆவின் பாலைக் கறந்துகொண் டாட்டக் கண்டு
பிழைத்ததன் தாதைதாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோர் அமுதம் ஈந்தார் குறுக்கைவீரட்ட னரே."

என்ற தேவாரத்தில் அத் 'தாபரம்' சிவலிங்கத்தையே குறித்தல் உணர்க. முற்போந்த சித்தியாரில் 'தாபர சங்கமங்கள் என்று இரண்டுரு'வே குறிக்கப்பட்டன; குருவைக் குறிக்கவில்லையே எனத்தோன்றும். அவ்விரண்டினும் நின்று பூஜை கொண்டு அருளைவைக்கும் மாபரனே குரு என்பது அறியத்தக்கது. அச் சிவஞான சித்தியாரின் முடிவிலே, "யார்க்கும் ஈனம் இலான் ஞானகுருவே; குருவும் இவனே; ஈசன் இவன்தான்" என்றும், "பரம்பிரமம் இவன் என்றும் பரசிவன்தான் என்றும் பர ஞானம் இவன் என்றும் பராபரன்தான் என்றும் அரன்தரும் சீர்நிலை எல்லாம் இவனே என்றும் அருட்குருவை வழிபடவே அவன் இவன்தானுயே...சிவமே ஆக்கும் பரிசித்தும் சிந்தித்தும் பார்த்தும்தானே" என்றும் உணர்த்திக் 'குருவே சிவம்' என்னும் உண்மையை வெளியிட்டமை காண்க. "ஆநந்தம் பெற்றுர் அருட்குருவே ஈசன் என்பார் மோனமே முற்றும் முயன்று" என்னும் துகளறு போதமும் ஈண்டு உணரத்தக்கது. சிவமும் குருவும் ஒன்றே என்னும் வாய்மையைப் 'போற்றிப்பஃறொடை' முதலியவற்றுலும் அறியலாம்.

'அறிவரியான்' எனமுதலும் சிவஞான சித்தியாரின், 'திருவேடம் சிவனுருவே யாகும்' 'சிவோகம் பாவிக்கும் அத்தாற் சிவனும் ஆவர்'; குறியதனுல் இதயத்தே அரனைக் கூடுங் கொள்கையினுல் அரன் ஆவர்; குறியொடுதாம் அழியும் நெறியதனுற் சிவமேயாய் நின்றிடுவர்' என்று, சரியாவான் முதலிய நால்வர்க்கும் உள்ள நாற்றிறமும் கூறியவாற்றுல் 'திருவேடம்' சிவனுக்கு உருவாதல் உணர்த்தப்பட்டது. சிவலிங்கமும் உருவம், திருவேடமும் உருவம். இவ்விரண்டுருவத்துள் திருவேடமே

மலானது, ஏன்? சித்துருவாதலால், சிவலிங்கம் ஜடரூபம். திருவேடம் சித்ரூபம். குருவாம் சிவம் ஜடரூப விளக்கத்தினும் பூரண மகிமை யுடைய விளக்கம் சித்ரூபத்திலேதான். அதனால் திருவேடம் சிவலிங்கத்தினும் சாலச்சிறந்தது. இவ்வுண்மையை உணர்ந்தே நம் முன்னோர்கள் சிவலிங்க வழிபாடுமட்டும் உள்ள சிவாலயங்களைக்காட்டிலும் குருவழிபாடும் திருவேட (ஜங்கம) வழிபாடும் உள்ள மடங்களையும் அவ்விரண்டனொடும் சிவலிங்கத்தையும் கொண்ட மடாலயங்களையும் மிக்க சிறப்புடையன எனப் போற்றி வந்தார்கள். அம்மாண்பறியாமற் கயமையே மிக்க இக்காலத்தை நோக்கி வருந்திப் பயன் என்ன? திருவருளை நோக்கி வரங்கிடப்பின், பழமை மீளலாம். 'தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம்' 'அடியார் நடுவுள் இருக்கும் அருள்' வேட்கையே நம் சமயாசாரியர்க்கு இருந்த உண்மையாலும் திருவேடத்தின் சிறப்பு விளங்கும்.

"திடம்பெற்ற ஞானிகள் சேர்கையினால், பசி தீர்கையினால்,
உடம்புற்ற உண்மை உறுகையினால், உப தேசிக்கையால்,
இடம்பெற்ற மங்கைபங் காளர் அடியர் இருக்கையினால்,
மடம்பெற்ற பேறு திருக்கோ யிலுக்கில்லை வையகத்தே"

என்று கண்டுபோற்றிய மேதைகளின் கருத்தாழத்தைக் காணப் பேதைகளுக்கு எவ்வாறு இயலும்?

திருமூலர் 'படமாடக் கோயில்' 'நடமாடக் கோயில்' என்னும் வேறுபாடுகாட்டி முன்னதினும் பின்னதன் மாண்பைத் தெளிவுறுத்திய உண்மையை எல்லாரும் சொல்லா நிற்பர். எனினும் ஏழைகளையே 'நடமாடக் கோயில்' என்றுகூறும் கீழ்மைக்கு எங்கே சென்று யாரிடத்தில் முறையிட்டுப் போக்கிக் கொள்ளலாம்.

இதுகாறும் அறிந்த குருலிங்க ஜங்கமம் மூன்றும் சிவாநுபவம் எய்துவதற்குரிய சாதனம் என்பது ஓர் அளவு தெளியக் கிடப்பினும், அம்மூன்றனுள் நடுவாய் உள்ள 'இலிங்கம்' வழிபாடு அதனை நிகழ்த்துதற்குத் தக்க நிலையில், 'மூர்த்திதலம் தீர்த்தம்' என்னும் முத்திறத்தில் உபயோகம் ஆகின்றது. தலத்தையும் தீர்த்தத்தையும் சாராது மூர்த்தியை

மட்டும்தனியே சார்தல் ஒல்லாது மூர்த்தி என்ருல் சிவலிங்கம். முதலிய சதாசிவமும் சோமாஸ்கந்தர், தக்ஷிணுமூர்த்தி, நடராஜர் முதலிய மகேசுரமும் கருதப்பெறும். அவற்றை வழிபடவேண்டின் அவை இருக்கும் தலத்தை முதலில் அடைதல் வேண்டும். அடுத்து அத்தலத்தில் அம்மூர்த்தியை அணுகற் பொருட்டுச் சுத்திசெய்துகொள்ளவேண்டும். அச்சுத்தியைத் தர அம்மூர்த்தி அருகில் அமைந்திருப்பது தீர்த்தம். தலத்தை உற்றுத் தீர்த்தம் ஆடிச்சுத்தி அடைந்து மூர்த்தியை வழிபடுவதே இயல்பான முறைமை. முகமதியரும் தமக்கு ஏற்ற அளவு இம்முறையைக் கொண்டொழுகுகின்றனர். சைவருட் பலர் நேரே மூர்த்தியை வழிபடச் செல்லும் ஆற்றலுடையராயுளர். அவர் தீர்த்தத்தை மதியாராயினும் தலத்தை மிதியாமற் செல்ல முடியாதன்ரே ?

'மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே'

என்று தாயுமானவர் அருளியிருக்கும் வாய்மையாலும், 'குரு லிங்க ஜங்கமம்' மூன்றனுள் நடுவே உள்ள இலிங்கத்தின் திறம் ஆகிய மூர்த்தி தலம் தீர்த்த வழிபாட்டைத் 'தலம் தீர்த்தம் மூர்த்தி' என்னும் முறையிலும் அவற்றைச் சிவாகமங்களில் விதித்த முறையிலும் தொடங்கினுல், சற்குருவின் உபதேசம் வாய்க்கும் என்னும் மெய்ப்பொருள் விளங்கிற்று. விளங்கவே, குருபதேசத்திற்குச் சாதனம் சிவலிங்க வ ழி பா டு என்பது பெற்ரும். அஃது இடையறவுபடாது சதாகாலமும் பயன்தர வேண்டின் திருவேடந்தொழுதலும் இன்றியமையாததாகும். ஆயினும், உலகில் மூர்த்தி தலம் தீர்த்தம் எண்ணிலாதன உள. அவற்றுள் எம் மூர்த்தியும் எத்தலமும் எத்தீர்த்தமும் மேலா னவை என்னும் வினு எழாதிராது. அதற்கு விடைதரல் எல்லார்க்கும் இயலாது. நம் ஆசிரியர் குமரகுருபரர்க்கே இயல்வ தாயிற்று. ஆகவே, அம் முனிவரர்,

"தீர்த்தம் என்பது சிவகங் கையே
ஏந்தருந் தலம் எழிற்புலி யூரே
மூர்த்தி அம்பலக் கூத்தன துருவே"

என்று அம்மூன்றனேயும் மூன்றடியிற் குறித்து, எவ்வடியையும் முதலாகக்கொள்ளும் வண்ணம் பாடி யருளினர். அடிமறி

மண்டில ஆசிரியப்பா இது. அடியை மறித்தல் கூடும். அடியின் பொருளை மறித்தல் கூடுமோ ?

திருவிளையாடற் புராணத்திலே மாயப் பசுவை வதைத்த படலத்திலே மதுரையாகிய தலமும் சொக்கலிங்கமாகிய மூர்த்தியும் பொற்றாமரை யாகிய தீர்த்தமும் ஒப்பிலாதன என்று பாடினார் பரஞ்சோதி முனிவர். அவை அத்தகையன என்றதில் ஐயமேயில்லை. அதனால், இம் முனிவரர் பாடியது பொய்யாமோ ?

விராட் புருடனது இதய கமலம் சிதம்பரம். உடலில் ஏனைய உறுப்புக்களில் இருந்து, ஒடுங்கும்போது இதயத்தே ஒடுங்கும் உண்மையை அறிவாரே அறிவார். ஏனைய சிவாலயங்களில் உள்ள சிவகலை யனைத்தும் நள்ளிரவில் சிதம்பரமான இதயத்தில் ஒடுங்கும் உண்மையை அனைவரும் உணர்வர். அதனாற்றான் 'கோயில்' என்ற அடை'பிலா(த் தனி) ப்பெயர் சிதம்பரத்திற்குரியதாயிற்று. 'கோயில்' எனப்படும் சிறப்புடையது இதுவே ஆயின், அதில் உள்ள மூர்த்தியும் தீர்த்தமும் அக்கோயிலிருக்கும் தில்லை தலமாகிய புலியூரும் அல்லாமல் பிறசிறப்புடையன ஆமோ ? விரிவஞ்சி அமைகின்றேன்.

(தொடரும்)

# ஒத்த கருத்துடைய ஓர் இருபுலவர்

செந்தமிழ்ச் செல்வன் சைவசமய சிரோன்மணி வித்துவான்
**திரு. பாலூர் கண்ணப்ப முதலியார், M. A., B. O. L., அவர்கள்,**
*பேராசிரியர், தமிழ்த்துறைத் தலைவர் புதுக்கல்லூரி, சென்னை–14.*

---

சீரும் சிறப்பும், பேரும் புகழும் பெற்ற நந்தம் செந்தமிழ் மொழியில் புலவர் என்னும் சொல், பொருளாழம் பெற்ற சொல் லாகும். புலமை எவர்க்கு உளதோ, அவரே புலவர் என்று புகலப்படுதற்குரியவர். இது குறித்தே பொய்யாமொழிப் புலவர்;

"அறமுரைத் தானும் புலவன்முப் பாலின்
திறமுரைத் தானும் புலவன் - குறுமுனி
தானும் புலவன் தரணி பொறுக்குமோ
யானும் புலவன் எனில்."

என்று விளக்கமுற விளம்பிச் சென்றுள்ளார். ஆகவே, புலமை வன்மை படைத்த இருபெரும் புலவர்களைக் குறித்துப் புகலப் புகுவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

அவ்விரு புலவர்கள் யாவரெனில், அவர்களே திருமூலரும் திருவள்ளுவருமே ஆவர். திரு என்னும் அடைமொழி இவ்விரு புலவர் பெருமக்கள் பெயர்க்குமுன் அமைந்திருப்பது கொண்டே, இவர்களது மாண்பினை நன்குணர்ந்து கொள்ளலாம். திரு என்னும் மொழிபல பொருள்களைக் குறிக்கும் பான்மை பெற்ற சொல்லே ஆயினும், பேராசிரியர் கொண்ட பொருள் "கண்டா ரால் விரும்பப்படும் தன்மை" என்பது. எனவே, இவ்விரு புலவர் மணிகள் கண்டாரால் விரும்பப்படுவர் என்பதில் ஐயம் எழ இடமில்லை அன்றே? இவர்கள் ஒப்பற்ற அறிவு ஒளி பெற்றவர் ஆதலின் "ஓர்" என்ற அடைமொழி "இருபுலவர்" என்பதற்கு முன் கொடுக்கப்பட்டுள்ளது. ஆகவே ஈண்டு ஓர் என்பது எண்ணைக் குறிக்காமல், ஒப்பற்ற என்ற பொருளைக் குறிக்கிறது என்பதையும் நாம் அறிதல் வேண்டும். இன்றேல்

ரன்ன இயல்புகட்கு இடனாக உள்ள இவ்விரு புலவர்களின் கருத்துக்களும் ஒற்றுமையுடையனவாகவே இருக்கின்றன. இதில் எள்ளளவும் ஐயமில்லை. இனி, எவ்வெம் முறையில் கருத்து ஒப்புமை காணப்படுகிறது என்பதை ஆய்வோமாக. இவ்விரு பெரும் புலவர்களின் கருத்து ஒற்றுமையினை இவர்கள் யாத்துள்ள நூலின் வாயிலாகத்தான் நன்கு உணரலாம்.

திருமூலர் திருவாய் மலர்ந்தநூல் திருமந்திரம்; திருவள்ளுவர் திருவுளம் கொண்டு யாத்தநூல் திருக்குறள். இவ்விரு ஆசிரியர்கள் தம்பெயர் முன் 'திரு' என்னும் அடைமொழிச் சிறப்புடன் திகழ்வது போலவே, இவ்விருவர் செய்த நூல்களும் 'திரு' என்ற அடைமொழியுடன் அமைந்திருப்பது கொண்டே இந்நூற்களின் ஏற்றத்தை இனிதின் உணரலாம்.

கருத்து ஒற்றுமைகளை நாம் காணும் முன் இவ்விரு நூல்களின் காலத்தையும் சிறிது அறிந்து கொள்ளுதல் சாலவும் பொருத்தமானது. திருக்குறள் சிலப்பதிகார நூலுக்கு முற்பட்டது. சிலப்பதிகாரத்தில் திருக்குறள் ஆட்சி காணப்படுவதே சிலம்புக்கு முற்பட்டது குறள் என்பது பெறப்படும். சிலம்பின் காலம் செங்குட்டுவன் காலமாகும். செங்குட்டுவன் இலங்கை முதலாம் கயவாகுவின் காலத்தவன். இம்முதலாம் கயவாகு திகழ்ந்த காலம் இற்றைக்குச் சற்றேறக்குறைய 1820 ஆண்டு கட்கு முற்பட்டது என்பது இலங்கைச் சரித்திரம் கூறுவதாகும். இக்கயவாகு கண்ணகிக்குக் கோவில் எடுத்த விழாவில் கலந்துகொண்டனன் எனச் சிலப்பதிகாரமும் கூறுகிறது. இதனை,

"அருஞ்சிறை நீங்கிய ஆரிய மன்னரும்
பெருஞ்சிறைக் கோட்டப் பிரிந்த மன்னரும்
குடகக் கொங்கரும் மாளுவ வேந்தனும்
கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்."

என்ற சிலப்பதிகாரம் கொண்டு நிறுவலாம். இந்தச் சான்றுகளால் திருக்குறள் 1820 ஆண்டுகட்கு முற்பட்டது என்பது தெளிவு. ஆக குறளின் காலம் கி. பி இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாகும்.

திருக்குறள் காலத்தை வரையறை செய்து சரித்திரசான்று கொண்டு நிறுவியது போலத் திருமந்திரம் தோன்றிய காலத்தை நிலைநாட்டல் என்பது அரியதொரு செயலாகும். ஆனால், சிற்சில குறிப்புக்களைக் கொண்டு திருமூலர் காலத்தை ஒருவாறு குறிப்பிடலாம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது திருத்தொண்டத்தொகையில் "நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்" என்று திருமூலரைக் குறிக்கின்றார். சுந்தரர் இதே திருத்தொண்டத் தொகையில் கழற்சிங்கரைக் குறிக்கும் போது, "கடல் சூழ்ந்த உலகெல்லாம் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்கன்" என்று குறிப்பிட்டுள்ளார். காக்கின்ற என்ற பெயரெச்சச்சொல் நிகழ் காலத்தினைக் காட்டுகின்றது. இதனால் சுந்தரர் காலத்திலேதான் இக்கழற்சிங்கன் வாழ்ந்திருக்க வேண்டும் என்பது தெளிவாகின்றது. இக்காடவர்கோன் காலம் கி. பி. 840 முதல் 865 ஆகும். ஆகவே, சுந்தரர் காலம் கி. பி. 9 ஆம் நூற்றாண்டாகும்.

ஒன்பதாம் நூற்றாண்டினரான சுந்தரர் திருமூலரைக் குறிப்பிடுதலின் திருமூலர் சுந்தரருக்கு முற்பட்டவர் என்பது பெறப்படுகிறது. திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் பாடல்களில் திருமூலரைப்பற்றிய குறிப்பு இலது என்றாலும், அவர்கள் பாடிய பாடல்கள் பற்பல அழிந்து பட்டமையின், அவற்றுள் ஒருவேளை இவரைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கலாம் எனக் கொள்ளின் இழுக்கு ஆகாது. சம்பந்தரும் அப்பரும் வாழ்ந்த காலம் கி. பி. 7ம் நூற்றாண்டு என்பது அறிஞர் துணிவு. மகேந்திரவர்ம பல்லவன் கி. பி 7ம் நூற்றாண்டினன். இவன் காலத்தவரே அப்பர். இரண்டாம் புலிகேசியின் காலமும் ஏழாம் நூற்றாண்டு. இப்புலிகேசியை வென்றவர் சிறுத்தொண்ட நாயனார். இந்நாயனார் சம்பந்தரை வரவேற்று உபசரித்துள்ளார். ஆகவே, சம்பந்தர் அப்பர் காலம் கி. பி. 7ம் நூற்றாண்டே என உறுதியுடன் கூறலாம். இச்சான்றுகள் சரித்திரச் சான்றுகள் ஆகும். (Historical evidence) இவ்விரு பெருமக்களும் கணபதியினைத் தமதுபாடலில் குறிப்பிட்டுள்ளனர். திருமூலர் தம் மந்திரங்களில் எந்த இடத்திலும் பிள்ளையாரைக் குறித்து ஒரு வார்த்தைகூட கூறிலர். சங்கநூல்களிலும் பிள்ளையாரைப் பற்றிப் பாடல் இல்லை. ஆனால், ஒருசிலர் திருமூலர் திருமந்

திரத்தில் ‘ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை’ என்ற பாடல் உள்ளதே எனக் கூறலாம். அப்பாடல் திருமூலர் வாக்கன்று என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. திருமூலரின் முதல் பாடல் ‘ஒன்றவன் தானே’ என்று தொடங்கும் பாட்டலேஆகும். “இதனை ஏன எயிறு அணிந்தாரை ‘ஒன்றவன் திரன்’ என எடுத்து” எனச் சேக்கிழார் செப்பும் ஆற்றால் உணரலாம். திருஞான சம்பந்தர் திருவாவடுதுறையினை வணங்கச் சென்ற போது, பலி பீடத்தின் அருகு, மலர் மணம் வீச, அதன் காரணம் என்ன எனப் பலிபீடத்தை ஆய்ந்த போது, திருமந்திரம் பாடல்கள் இருப்பதை அறிந்தார் எனச்செவி மரவுவழி அறிந்த உண்மை ஆகும். இன்னோரன்ன காரணங்களால் கி. பி. 7ம் நூற்றாண்டில் திகழ்ந்த அப்பர் சம்பந்தருக்கு முற்பட்டவர், திருமூலர் என்று கொள்ளலாம்.

மாணிக்கவாசகர் அப்பர் பெருமானுக்கு முற்பட்டவர் என்பது அப்பர் ‘நரியைக் குதிரை செய்வானும்’ என்று பாடுதல் கொண்டு தெளியலாம். இறைவன் நரியைக் குதிரை செய்தது மாணிக்கவாசகரின் பொருட்டே ஆகும். “நரியை குதிரைப் பரியாக்கி” என்பது திருவாத்வூரர் வாக்கு; மேலும், மாணிக்க வாசகர் பாடல்களில் விநாயகர் பற்றிய குறிப்பே இல்லை. வாத ஊரர் தம் பாடல்களில் கண்ணப்பநாயனுரையும் சண்டேசுர நாயனுரையும் மட்டுமே குறிப்பிட்டுப் பாடியுள்ளார். திருமூலரும் விநாயகரைப் பற்றி யாதொன்றும் குறிப்பிட்டிலர் அடியார் களுள் சண்டேசுரரை மட்டும் குடுப்பிட்டுள்ளார்; இதனை,

“உறுவ தறிதண்டி ஒண்மணற் கூட்டி
அறுவகை ஆன்ஐந்தும் ஆட்டத்தன் தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வால்வெட்டி மாலைபெற் ருனே.”

என்று திருமூலர் வாக்கைக் கொண்டு அறியலாம், இவ்விருகார ணங்களால் கி. பி. நான்காம் நூற்றாண்டினரான மாணிக்கவாச கர் காலத்திற்கு முற்பட்டவர் திருமூலர் என்று கூறலாம்.

திருமூலர் தம் கருத்தை வெளியிட ஒரே வகையான யாப்பு முறையினைப் பின்பற்றியுள்ளார், இம்முறை கடைச் சங்கப்

புலவர்கள் பால் அமைந்த ஒன்றுகும்.இதனை அக்காலத்து எழுந்த நூல்களைக் கண்டு தெளியலாம். அம்முறைக்கு இணங்கத் திருமூலர் கலிப்பாவின் ஒருபிரிவினை எடுத்துக்கொண்டு அப்பிரிவின் யாப்பினையே தம் நூலில் தொடக்க முதல், இறுதிவரையில் கையாண்டுள்ளார். இது நான்கடியும் ஓர் அடிக்கு நான்கு சீரும் பெற்றுவரக் கூடிய பாட்டாகும். இப்பொருத்தத்தைத் திருமந்திரத்தில் கணலாம். ஆகவே திருமூலர் சங்ககாலத்தை ஒட்டி வாழ்ந்தவர் எனஒருவாறு கூறலாம். எனவே திருமூலரும் திருவள்ளுவரும் கடைச்சங்கக் காலத்துப் புலவர் ஆவர் என்பதை நிலைநாட்டலாம்.

ஆனால் ஈண்டொரு கருத்தை வெளியிடாமல் மேலே செல்லுதற்கில்லை. அதாவது, திருமூலர் பல்லாண்டுகள் வாழ்ந்தனர் என்பது இத்துடன் மற்றுமொரு கருத்து, ஒவ்வொரு திருமந்திரமாக மூவாயிரம் திருமந்திரங்களைப் பாடினர் என்பது இக்காலத்தவர் இதனை ஏற்க மறுத்தாலும் திருமூலர் பற்பல ஆண்டுகள் உயிருடன் வாழ்ந்தவர் என்பதை எவரும் மறுக்க இயலாது. இவர் பல ஆண்டுகள் தாம் வாழ்ந்தமையைத் தமது பாடல்கள் வாயிலாகவே அறிவித்துள்ளார். இதனை, "ஒப்பில் எழுகோடி யுகம் இருந்தேனே" என்றும் "இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி" எனவும் பாடியுள்ளனவற்றைக் கொண்டு தெளியலாம். ஈண்டு "எழுகோடி" என்பதும், 'எண்ணிலிகோடி' என்பதும் "பல ஆண்டுகள்" என்ற குறிப்பினைக்காட்ட வந்த உயர்வு நவிற்சியணி அமைந்த தொடராகக் கொள்வதில் இழுக்கில்லை.

இங்ஙனம் பலப்பல ஆண்டுகள் உயிருடன் நிலவ இயலுமா என்ற ஐயம் எழக்கூடும். இவ்வையத்தையும் திருமூலர்வாக்கைக்கொண்டே நீக்கிக் கொள்ளலாம். இந்த உண்மையினை "வளியினை வாங்கி வயத்தில் அடக்கில், பளிங்கொத்துக்காயம் பழுக்கினும் பிஞ்சாம்" எனவும் நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில், வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை" எனவும் ஈராறு கால்கொண்டு எழுந்தபுரவியைப், பேராமல் கட்டிப் பெரிதுண வல்லீரேல், நீராயிரமும் நிலம் ஆயிரத்தாண்டும் பேராது காயம்" எனவும் காற்றைப்பிடிக்கும் கணக்கறிவாளர்க்குக் கூற்றை உதைக்கும் குறியது வாமே" எனவும் மேலைவாயில்

வெளியுறக் கண்டபின் காலன்வார்த்தை கனவிலும் இல்லையே ” எனவும் வரும் வரிகளால் உணரலாம்.

இனி நாம் இம் மாபெரும் புலவர்களின் பாடல்களில் அமைந்த ஒத்த கருத்துக்களைக் காண்போமாக. திருமந்திரம், திருக்குறள் நூல்களில் அமைந்த தலைப்புக்களின் அமைப்பும் இவ்விருநூற்களிலும் ஒத்துக்காணப்படுகிறது. இதனை, கடவுள் வாழ்த்து, அன்புடைமை, கல்லாமை, கல்வி, கள்ளுண்ணாமை, கொல்லாமை, நடுவு நிலைமை, புலால் மறுத்தல், பிறர்மனை நயவாமை, வானச் சிறப்பு, பெறையுடைமை பெரியாரைத் துணைக்கோடல், தவம், துறவு, கூடா ஒழுக்கம், வாய்மை, ஊழ், நல்குரவு, அவா அறுத்தல், புறம்கூறாமை, வாய்மை, [நிலையாமை என்ற ஒரேதலைப்பில் திருவள்ளுவர் அமைத்தனர். திருமூலர் உயிர் நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என்று பிரித்துப்பாடினர்] என்ற தலைப்புக்களைக் கொண்டு உணர்ந்து கொள்ளலாம்.

இறைவனைப்பற்றி இவ்விருபுலவர்களும் குறிப்பிடும்போது, திருமூலர் அறிவுடையார் நெஞ்சொடு “ ஆதி பகவனும், ” ‘ கமல மலர் உறைவான்அடி, ” “போது உகந்தேறும் புரிசடையான்அடி, ”, “ தன்னை ஒப்பார் ஒன்றும் இல்லாத் தலைமகன், ” ஒப்பிலி வள்ளலே, ” “ அற ஆழி அந்தணன் ஆதிபராபரன், ” கொடையுடையான் குணம் என் குணம் ஆகும், ” பொறிவாயில் ஒழிந்து எங்கும்தானான போதன், ” “பொருள் அதுவாய் நின்றபுண்ணியன், ” “ ஆரும் அறியார் அகாரம் அவன் ” என்றும், திருவள்ளுவர், “ ஆதிபக வன் முதற்றே உலகு, ” “ மலர் மிசை ஏகினான் மாணடி, ” ‘என் குணத்தான் தாள், ’ “ தனக்கு உவமை இல்லாதான் தாள், ” ‘ அற ஆழி அந்தணன் தாள்’ “ அகர முதல எழுத்தெல்லாம்,’ ஆதிபகவன் ’ பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம், ‘இறைவன் பொருள் சேர் புகழ்’ என்று பாடியுள்ளார்.

சொற்றொடர் ஒற்றுமையினை ‘ ஆனமே சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்’ ‘உடம்பொடு உயிரிடை நட்பு’ என்று திருமந்திரத்திலும், சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று ஐந்தின் ‘உடம்பொடு உயிரிடை நட்பு’ என்று திருக்குறளிலும் வருவது கொண்டு தெளியலாம்.

பொருள் ஒற்றுமைகளைக் கீழ்வரும் எடுத்துக் காட்டுகளின் மூலம் நன்கு தெரிந்து கொள்ளலாம்.

திருமூலர் "ஒருமையுள் ஆமைபோல் உள் ஐந்து அடக்கி" 'ஆமை அகத்தினில் அஞ்சும் அடங்கிடும்', "கூற்றம் வருங் கால் குதித்தம் ஆமே", "காக்கை கரைந்து உண்ணும்", "பற்றது பற்றின் பரமனைப் பற்றுமின்" "காமம் வெகுளி மயக்கம் இவை கடிந்து" "அந்தண்மை பூண்ட-அருமறை அந்தத் துச்சிந்தை செய் அந்தணர்" பார்த்திருந்து உண்மின்" "காமமும் கள்ளும் கலதி கட்கே ஆகும்" 'வாணுள் அடைக்கும் வழி அது ஆமே' "தத்துவ ஞானம் தலைப்பட்டவர்க்கே' தத்துவ ஞானம் தலைப்படலாய் நிற்கும்" "அடக்க அறிவெனும் தோட்டியை வைத்தேன்" "ஆவையும் காவலன் காப்பவன்" 'அமுதூறும் மாமழை' என்று கூறியது போலத் திருவள்ளு வரும்' முறையே, "ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல்"; "கூற்றம் குதித்தலும் கைகூடும்", "காக்கை கரவாக் கரைந் துண்ணும்", "பற்றுக பற்றற்ருன் பற்றினை", "காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றும் நாமம் கெட", "அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுக லான்", "வருவிருந்து பார்த்திருப்பான்" "இருமனப்பெண்டிரும் கள்ளும் கவறும் திருநீக்கப்பட்டார் தொடர்பு", 'வாழ்நாள்வழி அடைக்கும் கல்', 'தவமும் தவமுடையார்க்கு ஆகும்' "உரன் என்னும் தோட்டியால் ஓர் ஐந்தும் காப்பான்" "ஆபயன் குன்றும்" தான் அமிழ்தம் என்று உணரல் பாற்று" என்று தம் நூலில் கூறியுள்ளார்.

இங்கு எடுத்துப் பேசப்பட்ட இருபெரும் புலவர்களும் மிக மிகப் பேரறிவு படைத்த பெருமக்கள் ஆவர். சிறந்த சித்தர் களும் ஆவர். திருமூலர், "நம்பிரான் திருமூலன்" என்று சுந்தரராலும், "என் உச்சி அடிவைத்த பிரான் மூலனுகின்ற அங்கணனே" என்று நம்பியாண்டார் நம்பிகளாலும் "அருள் மூலர்" என்று சிவஞானமுனிவராலும், "திருமூலதேவனையே சிந்தை செய்வார்க்குக் கருமூலம் இல்லையே காண்" என்று பெயர் அறிய ஒண்ணு ஒரு பெரியாராலும் போற்றப்பட்ட

மாபெரும் புலவர் ஆவார். திருமந்திரத்தின் மாண்பினைப் பற்றிப் பேசவந்த ஒரு பெரியார்,

"திருமந் திரமே சிவகதிக்கு வித்தாகும்
திருமந் திரமே சிவமாம் - அருமந்த
புந்திக்கு ளேநினைந்து போற்றுமடி யார்தமக்குச்
சந்திக்கும் தற்பரமே தான்."

என்று உண்மை தெரிந்து ஓதியுள்ளார்.

திருவள்ளுவர் பெருமையினைத் திருவள்ளுவமாலை என்னும் நூல் கொண்டு உணர்ந்து கொள்ளலாம். "பாமுறை தேர் வள்ளுவர்' எனச்சீத்தலைச் சாத்தனாரும், 'புலவன் வள்ளுவன்'என இறையனாரும், 'நான்முகத்தோன் தான் மறைந்து வள்ளுவனாய்' என உக்கிரப் பெருவழுதியாரும், "வாலஅறிவின் வள்ளுவன்" எனப்பரணரும் "முப்பால் மொழிந்த முதற்பாவலர் ஒப்பார் எப் பாவலரினும் இல்" என ஆசிரியர் நவ்வந்துவனாரும், 'தெய்வத் திருவள்ளுவர்' எனக்கீரந்தையாரும், 'மறுவில் புலச்செந்நாப் போதார்' என நல்கூர் வேள்வியாரும்' "தேவில் சிறந்த திரு வள்ளுவர்' என உறையூர் முதுகூற்றனாரும்; தெய்வத் திரு வள்ளுவர்" எனத்தேனிக்குடிக்கீரனாரும் "நாப்புலமை வள்ளு வனார்' எனக்கவுணியனாரும் நூலின் நயத்தைத் திருவள்ளுவ மாலையில் புகழ்ந்துள்ளார். தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் எனத்துறைமங்கலச் சிவப்பிரகாச சுவாமிகளும் போற்றியுள் ளார். திருக்குறளின் சிறப்பைக் கூறவந்த திருவள்ளுவமாலை என்னும் நூல் "அப்பால் ஒருபாவை ஆய்பவோ வள்ளுவனார் முப்பால் மொழிமூழ்குவார்" என்னும் "மண் இன்று அளந்தது குறள்" என்னும்,

"ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததன்பின் – போயொருத்தர்
வாய்கேட்க நூலுளவோ? மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்."

என்றும், "வள்ளுவனார் முப்பாலின் மிக்கமொழியுண்டு, எனப் பகர்வார் எப்பாவலரினும் இல்," "உள்ளுதொறுள்ளுதொறுள்ளம் உருக்குமே வள்ளுவர் வாய்மொழி மாண்பு" என்றும் எல்லாப்

பொருளும் இதன்பால் உள; இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லையால்'' எனவும் "வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்கு ஆய்தொறும் ஊறும் அறிவு'' எனவும் திருவள்ளுவர் குறள் வெண்பாவில் சிறந்திடும் முப்பால்'' எனவும்,

"உள்ளுநர் உள்ளும் பொருள் எல்லாம் உண்டெென்ப வள்ளுவர் வாய்மொழி மாட்டு,'' எனவும், 'உள்ளிருள் நீக்கும் விளக்கு' எனவும் உள்ளக் கமலம் மலர்த்தி உளத்துள்ள தள்ளற்கு அரிய இருள் தள்ளுதலால் - வள்ளுவனுர் வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரும் ஒக்கும் எனவும், "சிந்தைக்கினிய செவிக்கினிய; வாய்க்கினிய வந்த இரு வினைக்கு மாமருந்து - வள்ளுவனுர் பன்னிய இன்குறள் வெண்பா'' எனவும்,"வள்ளுவர் பன்னிய இன்குறள் வெண்பா அகிலத்தோர் உள்ளிருள் நீக்கும் ஒளி'' எனவும், வள்ளுவர் பாட்டின் வளம் உரைக்கின் வாய் மடுக்கும் தெள் அமுதின் தீஞ்சுவையும் ஒவ்வாதால்'' எனவும் வாயாரப்போற்றிப் புகழ்கிறது. அகவே, இவ்விருபெரியார்களின் ஒத்த கருத்துக்களை நாம் நன்கு உணர்ந்து அவற்றின்படி ஒழுகல் நம் கடனுகும்.

---

## சோதனை செய்வது அழகா!

இராகம் :- நடபைரவி தாளம் :- ஆதி

பல்லவி

சோதனை செய்வது அழகா - சோம
சுந்தரனின் குமரா முருகா - என்னை (சோதனை)

அநுபல்லவி

வேதனை தாளேன் மேதினி மேலே
வந்தெனையாள் வாய் வள்ளி மணுளா - (சோதனை)

சரணம்

கருணைப்பொழியும் முகம் ஆறுமிருந்தும்
கைவிடல் சரியோ இதுமுறையோ
குருவெனும் புகழ்பெறும் குன்றமமர்ந்தவேலா
குறைதனைக் கேட்டும் நின்னருள் தாராமல் - (சோதனை)

திரெ. பாலகிருஷ்ணன்
நிர். 25-நடுக்கல்லுக்காரத் தெரு, மரக்கடை P. O.
திருச்சி - 8.

# *ஆளுடைய பிள்ளையார் அருந்தமிழ்

கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர், சைவசித்தாந்த வித்தகர்,
வித்துவான்:
திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள்

## துதி

(கட்டளைக் கலித்துறை)

"என்றும் அடியவருள்ளத் திருப்பன இவ்வுலகோர்
நன்றுமலர் கொடுதூவித் துதிப்பன நல்லசங்கத்
தொன்றும் புலவர் யாப்புக்குரியன ஒண்கலியை
பொன்றுங் கவுணியன் சைவசிகாமணி பொன்னடியே"

(11-ஆம் திருமுறை நம்பியாண்டார் நம்பிகள்)

## முன்னுரை

பெரியோர்களே!

இங்கே இன்று ஒரு அரும்பொருளைப்பற்றிப் பேசும் பேறு அடியேனுக்கு வாய்த்தது. அப்பொருளைப்பற்றிப் பேசுமாறு பணித்தருளிய தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கைலைக் குருமணி அவர்கள் எழுந்தருளியிருக்கும் திசை நோக்கித் தொழுது, பேசும் பொருளைப்பற்றி,

I (1) நமது பெருமானுக்கு ஆளுடைய பிள்ளையார் என்னும் பெயர் போந்தமையும், அவருடைய தமிழ் (அருமையுடைத் தென்பது) அருந்தமிழ் என்பதும்;-

(2) எவ்வாறு அருமையுடைத் தென்பதன் விளக்கம்:-

II சுவாமிகள் திருவாக்கு.

III அவற்றில் காணும் பல்லாயிரம் பொருள்களில்:-

(1) சாத்திரக் கருத்துக்கள்.

---

* புள்ளிருக்கு வேளூரில் ஆற்றிய சொற்பெருக்கு.

(2) தோத்திரங்கள், (பாடுவார்க்கு உண்டாகும் நன்மை, இரங்கவேண்டுதல் முதலியன.)

(3) அகச்சான்று — அற்புதம் செய்தமைக்கு.

(4) தலவரலாறு கூறுதல்.

(5) அம்பிகை திருநாமம், சுவாமி திருநாமம் கூறுதல்.

(6) இயற்கை வருணனை.

(7) கவித்துவம்.

(8) முத்தமிழ்விரகர் என்பது.

(9) இம்மையே பயன்தரும் பதிகப்பெருமை.

என்னும் தலையங்கங்களில் சில கூறுவேன்.

### பேச்சு

I (1) இவருக்கு ஆளுடைய பிள்ளையார் என்னும் திருநாமம் வரக்காரணம் சேக்கிழார் பெருமான் கூறியருளுகிறார். அது,

"யாவருக்குந் தந்தைதாய் எனுமிவரிப் படிஅளித்தார்
ஆவதனால் ஆளுடைய பிள்ளையா ராய்அகில
தேவருக்கும் முனிவருக்குந் தெரிவரிய பொருளாகும்
தாவில்தனிச் சிவஞான சம்பந்த ராயினர்."

என்பதால் அறியலாகும். திருவாரூரிலுள்ள "பூமன்னு பதுமம் பூத்த" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய "கோவி ராஜகேஸரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள், ஸ்ரீ குலோத் துங்க சோழ தேவரின் ஏழாம் ஆண்டுக் கல்வெட்டில், ஆளுடைய பிள்ளையார்க்கும் திருநாவுக்கரசு தேவர்க்கும் வேண்டும் அர்ச் சனைக்கு இறுப்பதாக அர்ச்சனாபோகமாக இறையிலி இட்ட நிலத்துக்கு" - என்னும் கல்வெட்டுப்பகுதி (S. I. I. Vol VII No. 485) திருஞானசம்பந்தப் பெருந்தகையார்க்கு ஆளுடைய பிள்ளையார் என்னும் திருப்பெயர் உண்மைக்குச் சான்று பகர் கின்றது.

(2) இவர் தமிழ் அருமையுடையதென்பதனை இவரே தமது வாக்கில் "விலையுடை அருந்தமிழ் மாலை வல்லார்" எனத் திருவாவடு துறைப் பதிகத்தில் அருள்கிறார். இன்னும்,

"காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரற் கம்பொன்
ஆயிரம் கொடுப்பர்போலும் ஆவடுதுறையனுரே"

என அப்பரடிகள் சம்பந்தர் பாட்டின் பயனையும்;

"நாளும் இன்னிசையாற் றமிழ்பரப்பும் ஞானசம்பந்தன்"

எனவன்ருெண்டப் பெருந்தகையும்; அவ்வருந்தமிழ்ப் பெருமையைப் பாராட்டுகின்றனர்.

II சுவாமிகள் திருவாக்கு:-

அம்மையார் தமக்கு அருளிய அபரஞானம், பரஞானம், (முறையே பல கலை நூற்பொருளையும் உணர்தல், அவற்றை அநுபவ வாயிலாக உணர்தல்) இரண்டையும் நாவினுல் உண்டருளி, அதனை நம்மவர் செவியினுல் மடுக்கும் வண்ணம் அருளினுர் என்பதை,

"பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையினியற்
பாவான் மொழிஞானப் பாலுண்டு — நாவால்
மறித்தெஞ் செவியமுதாய் வார்த்தபிரான்"

என்னும் நால்வர் நான்மணிமாலையிற் சிவப்பிரகாச அடிகளார் கூறுவர்.

III (1) அவ்வருந்தமிழ்ப் பாசுரங்களிற் பல, சைவசித்தாந்தக் கருத்துக்களையுடையன. அவற்றுள் ஒன்று,

"எட்டுத்திசை தானுய்வேருய் உடன்ஆனுன்
இடம்வீழிம் மிழலையே"

(திருவீழிமிழலை-பண்நட்டபாடை-பாசுரம் 2.)

என்னும் பாசுரத்தில்,

"அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே"

என்னும் சிவஞானபோதம் இரண்டாம் சூத்திரக் கருத்துக் காண்கிறது. அத்துவிதம் என்னும் சொற்குப்பொருள் விரிக்குங்கால் அவையேயாய், தானேயாய், அவையேதானே ஆய் என இரட்டுற மொழிந்து இறைவன் ஆன்மாக்களோடு கலந்து நிற்றல் புனருற்பவஞ்செய்யுங்கால் பொன்னும் பணியும்போல்

அவையேயாகியும் (அபேதம்); சித்து, சதசித்து என்னும் தன்மையினுல் இருளும் ஒளியும் போல வேருகியும் (பேதம்); எங்கும் நிறைந்திருக்கும் தன்மையினுல் சொல்லும் பொருளும் போல (பேதாபேதம்) வேருகியே பிரியாது நின்றும் உள்ளநிலையை இங்கே உணரத்தக்கது. (மாதவச் சிவஞான யோகிள் உரை)

(2) தேவாரத் திருவாசகங்கள் எல்லாம் சிவபெருமானைத் துதிக்கும் தோத்திரப்பாக்களே. அத்தோத்திரத்திலும் நமது சம்பந்தப்பெருமான் இறைவனுடைய பேரருளையும் அதுபெற்ருர் அடையும் பயனையும் வைத்து,

“மண்புகார் வான்புகுவர் மனம் இளையார் பசியாலும்
கண்புகார் பிணியறியார் கற்ருரும் கேட்டாரும்
விண்புகார் எனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட் டெம்தலைவன்தாள் சார்ந்தாரே”

எனக் கூறுகிருர்.

அடியார்கட்கு இரங்கல் வேண்டுமென அரனை வேண்டுகிருர். அது “மறையுடையாய் தோலுடையாய்” என்று தொடங்கும் திருநெடுங்களம் பாசுரமாகும்.

(3) சில பாசுரங்கள் சம்பந்தப்பெருமான் செய்த அற்புதங்களுக்கு அகச்சான்றுகளாய்த் திகழ்வன. ஒன்று உதாரணமாக “ஓடம் வந்தணையும்” என்று தொடங்கும் பாசுரமாகும்.

(4) சில தலவரலாறு கூறுவன:-

“தன்னாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானுர்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே.”

(திருபுள்ளிருக்கு வேளூர்-பண்-சீகாமரம்-பாடல்-1)

என்பதில் சம்பாதி, சடாயு இவர்களைப்பற்றிய குறிப்பு கிடைக்கின்றது.

(5) சில பாசுரங்கள் அவ்வத்தலத்து அம்பிகை திருநாமம் கூறுவன. திருப்புறம்பயத்தில் எழுந்தருளியிருக்கும் அம்பிகையின் திருநாமம் கரும்படுசொல்லி என்பதாகும். இதனை,

“கரும்போடு படுஞ்சொலின் மடந்தையை மகிழ்ந்தோய்”

என்று அவ்வூர்ப் பதிகத்தில் எடுத்தாண்டுள்ளார்.

சில தலங்களில் இறைவன் திருநாமத்தையும் கூறுவர். அவளிவள்நல்லூர்க் கடவுளின் பெயர் தம்பரிசுடையார் எனக்

காட்டுகிறார். அது பெரிய புராணத்தாலும் கல்வெட்டாலும் அறியத்தக்கது.

(6) இயற்கை வருணனைக் கூறுமிடத்து நம் சம்பந்தப் பெருமான் பாசுரங்களே அதிகமாகக் கூறிமிளிரும். திருவீழி மிழலை மருதநிலத்தை அரசர் வீற்றிருக்கும் அத்தாணி மண்டப மாகவும், குளத்தை மகளிர் முகமாகவும் வருணித்தமை காண்க.

(7) திருஞான சம்பந்தப்பெருமான் கவித்துவத்தை என் னென்பாம். பதிபோதத்தால் அருளிய பாசுரங்களை மலசகித மான பசுபோதத்தால் நாமோ காணவல்லாம். திருவலிவலம் பதிகத்தில் உள்ள,

" பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே."

என்னும் இப்பாசுரத்தைத் தாளவொத்து இட்டுப்பாடுங்கால் இரண்டெழுத்திலும் நான்கெழுத்திலும் நிறுத்தி நிறுத்தித் தாளம் அமையப் பாடியிருக்கும் சிறப்புப் பாராட்டற்குரிய தாகும்.

(8) முத்தமிழ் விரகர் என்பது:- திருவியமகம், மாலை மாற்று இவை இயற்றமிழ். சீகாமரம் முதலிய பண்கள் இசைத் தமிழ். இவையே நடித்தற்கண் நாடகத்தமிழ். இவைகளில் வல்லவர் ஆதலால் முத்தமிழ் விரகர் என்னும் திருநாமம் பெற்றார்.

(9) இம்மையே பயன்தரும் இவர் பாசுரங்கள் என்பதை, கோளறு திருப்பதிகம், திருநீற்றுத் திருப்பதிகம், திருநீல கண்டத் திருப்பதிகம் (" அவ்வினைக்கிவ்வினை ") என்னும் பதிகங்களை யோதுவார் பயனெய்துதல் இன்றும் கண்கூடாக அறியத்தக்கன.

(முடிப்புரை)

ஞானசம்பந்தப் பெருந்தகையாரின் திருவருள் கூட்டுவித்த துணை யானே சில கூறினேன். கேட்டருளிய தங்கட்கு அடியேன் வணக்கம் உரியதாகும்.

# பண்டைய அறப்போர் முறை

திரு. கை. சுப்பிரமணியன் அவர்கள்
வித்துவான் இரண்டாம் யாண்டு.
செந்தமிழ்க் கல்லூரி. திருப்பனந்தாள்.

"வீரம் செறிந்த தமிழ் நாடு" என்று பாரதியால் பாடிப் பாராட்டப்பட்டது நம் தமிழ்நாடு. வீரத்தைச் செய்யும் போது அறமும் திகழ்ந்தது. அறப்போர் என்பதனை வடமொழியில் "தர்ம யுத்தம்" என்று கூறுவார்கள். இப்போரைத்தான் தமிழர்கள் விரும்பினர். போரில் மடிந்து, வீர உலகத்தை அடைந்தனர். தமிழர்கள் அறத்தோடு போரிட்டு மடிவதைத் தான் விரும்பினர். இதற்குச் சான்றுகச் சில செய்யுட்களை ஆராய்வோம்.

ஒருகால், தேவர்களுக்கும் அவுணர்களுக்கும் கடுமையான பூசல் நடந்தது. முருகனது அருளினுல் பிழைத்தோடிய சில அவுணப் படைத்தலைவர்கள் தங்கள் மனைவிமார்களிடம் சென்று, "நாங்கள் போர் செய்த படைக்கலங்களை யெல்லாம் கீழே போட்டுவிட்டு, உடலில் குருதி வழிய ஓடிவந்து விட்டோம். பூத கணப் படைத்தலைவர்முன், அச்சத்தால் மாலைகளுடன் அவிழ்ந்த தலைமயிர் உடையார்க்கும், புறங்காட்டி ஓடியவர்களுக்கும், வாள்சோர்ந்த பெரிய கைகளை உடையவர்களுக்கும், எங்களைப் போலவே உங்கள் தாலிக்கும் முருகனுனவர் வேலியாயினுர்" என்று கூறினுர்கள். இதைக் குமர குருபர சுவாமிகள்,

"போரோடு படைதுறந் துடறிறந் தோடுசெம்
புனலோட வோடிநிமிரும்
புணரிப் பெருந்தானை யவுணப் படைத்தலைவர்
பூதப்படைத் தலைவர்முன்

தாரோ டவிழ்ந்திட்ட குஞ்சிக் கிமைத்திட்ட
தழல்விழிக் கெதிர் செலாத
தாளுக்கு வாள்சோர் தடக்கைக்கு நாமநும்
தாலிக்கு வேலிகொலெனு.........''

(முத்துக். பிள். பாடல். 91.)

என்று கூறியுள்ளார். இதனுல், போர் செய்யும் வீரர்கள் தலை முடி அவழ்ந்தவர்களையும், கண்ணிமைத்தவர்களையும், புறமுதுகு காட்டியவர்களையும், வாளைக் கீழே நழுவ விட்டவர்களையும், கொல்லமாட்டார்கள் என்பது நன்கு விளங்கும்.

சீவக சிந்தாமணியில் அறப்போரைப் பற்றிய ஒரு செய்தி காணப்படுகின்றது. ''ஒரு வீரன் மதத்தையுடைய யானையை வெட்டினுலும், அவனைப் பார்த்த பிறர் 'இவன் ஒரு விலங்கை யழித்துவிட்டான்' என்று மிகவும் இழித்துக் கூறுவாராகலின், மதவேழத்தைக் கொல்லமாட்டான். முன்பு வெட்டுண்டவர் தனக்கு ஒப்பாராயினும் பிறர் தீண்டின எச்சிலென்று அவரை யும் கொல்லமாட்டான், தனக்கு இளையாரைக் கொன்ருல் மறத்திற்கு இழுக்கென்று, அந்த இளையாரையும் கொல்லமாட் டான். முதியாரைக் கொல்லல் அறம் அன்மையின் அவர்களை யும் கொல்லமாட்டான்.'' இந்தச் செய்தியைக் கூறும் சீவக சிந்தாமணிப் பாடல் வருமாறு :

,, வீறின்மையின் விலங்காமென் மதவேழமு மெறியான்
ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான்
மாறன்மையின் மறம் வாடுமென் றிளையாரையு மெறியான்
ஆறன்மையின் முதியாரையு மெறியானயி லுழவன்.''

(சீவ. பாட். 2261.)

திருவள்ளுவர் இவர்களைப்பற்றிக் கூறும்போது ' தனக்குச் சொல்லப்பட்ட அறத்தினின்று வழுவாது, அறமல்லாதன தன் நாட்டின்கண் நிகழாமல் கடிந்து, வீரத்தினின்றும் வழுவாது நடப்பவனே மன்னன் ஆவன் என்கிருர். அப்பாடல்,

'' அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு'' (குறள். 384.)

இக்கருத்தை வலியுறுத்த மற்றொரு பாடல் தொல்காப்பிய புறத்திணையில் மேற்கோளாகக் காணப்படுகின்றது. அதில், "நான் இருகை யுடையேன். யானையானது ஒரு கை (தும்பிக்கை) யுடையது. இரு கையுடைய நான், ஒருகையுடைய யானையைக் கொல்வது இழுக்கு" என்று ஒரு வீரன் கூறுவதாக வருகிறது. அச் செய்யுள் :—

"தானால் விலங்காற் றனித்தார் பிறன்வரைத்தால்
யானை யெறித லிளிவரல் – யானை
ஒருகை யுடைய தெறிவலோ யானும்
இருகை சுமந்துவாழ் வேன்" (தொல். புறத். 5. நச். மேற்.)

மேலும், ஒருவன் புறமுதுகிட்டவனை வாளோச்சான் என்பதை,

"அழிகுநர் புறக்கொடை யயில்வே லோச்சாக்
கழிதரு கண்மை காதலித் துரைத்தன்று"
(புறப், வஞ்சித்தழிஞ்சி. 20 )

என்ற கொளுவால் அறியலாம்.

ஆசிரியர் ஐயனாரிதனார் இக்கருத்தை வலியுறுத்த உதாரணப் பாடல் தருகின்றார். அப்பாடல் :—

"கான்படு தீயிற் கலவார்தன் மேல்வரினும்
தான்படைத் தீண்டாத் தறுகண்ணன் - வான்படர்தல்
கண்ணியபி னன்றிக் கறுத்தார் மறந்தொலைத
லெண்ணியபின் போக்குமோ வெஃகு"
(புறப், வஞ்சித்தழிஞ்சி. 20.)

புறநானூற்றில் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடிய பாடலில், பண்டைப் போர்முறை நன்கு விளக்கப்பட்டுள்ளது. அதில், "பசுவையும், ஆனினது இயல்பையுடைய பார்ப்பன மக்களையும், மகளிர்களையும், நோயுடையவர்களையும் தென்புலத்தவரைப் பாதுகாத்து, பிண்டோதகக் கிரியை செய்யும் பிள்ளைகளைப் பெறாதவர்களையும் கொல்லுதல் தவறு" என்று கூறப்பட்டுள்ளது.

“ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெருஅ தீரும்
எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை............ (புறம், 9.)

பார்ப்பார் முதலியோரை அழித்தல் தவறு என்பதை நமக்கு இன்னும் நன்ருக உணர்த்துவது சிலம்பு. அதில், கண்ணகி தன் கணவன் கள்வனல்லன் என்பதை நிறுபிக்கிருள். உடனே அவள் “பார்ப்பார், அறவோர், பசு, பத்தினிப் பெண்டிர், மூத்தவர், குழந்தை என்கின்ற இவர்களை விட்டு மற்றவர்களை யெல்லாம் தீப்பற்றுக” என்று கூறுகின்ருள். உடனே, அவ் வாறே தீப்பற்றுகிறது. அப்பாடல்,

“பார்ப்பார் அறவோர் பசுப்பத்தினிப் பெண்டிர்
மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்களன்று....................
..................................................................
பொற்ருெடி ஏவப் புகையழல் மண்டிற்றே
நற்றேரான் கூடல் நகர். (சிலம்பு.)

இதுகாறும் கூறிய அறப்போரை செய்து மேம்பட்டவர்கள் நம் தமிழ்க்குடிமக்கள். மூவேந்தர் முதல் மற்றைய எல்லா வேந்தர்களும் இவ்விதப் போர்முறையைத்தான் விரும்பினுர்கள். இதையெல்லாம் நமக்கு விரித்துக் காட்டுவது புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை, சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய பழந்தமிழ் நூல்களாகும். அவற்றை நாம் நன்கு பயின்று தமிழரின் பெருமையைத் தரணியில் பரவச் செய்திடு வோம்!

---

# *குமரகுருபரரும் இரேகை சாஸ்திரமும்

வித்துவான்: திரு. ம. சிவசம்பு அவர்கள்,
*தமிழ்ப் பேராசிரியர், தருமையாதீன தமிழ்க்கல்லூரி*
*தருமபுரம், மாயூரம்.*

குமரகுருபரர் முருகன் அருள்பெற்ற புலவர். நற்றமிழ்க் கவிஞர். சிறந்த சிவபக்தர், உயர் குணம் நிறைந்தவர். தருமபுர ஆதீன திருக்கூட்டத் தொண்டர். உலகியற் பேரறிஞர், சகலகலாவல்லுநர். இவற்றையெல்லாம் அவர்பாடிய பிரபந்தங்களைப் படிக்கின்றபொழுது நாம் அறிகிறோம். அவரது தமிழ்ப்பற்றையும் குருபக்தியையும், அடியவர் பக்தியையும் அவரது நூல்கள் நன்கு விளக்குகின்றன. பண்டைக்கால முனிவர்கள் மருத்துவம்-சாஸ்திரம் முதலியவற்றை நன்கு தெரிந்திருந்தார்கள். சித்தர்கள் மருத்துவத்தில் தலைசிறந்து விளங்கினார்கள். அதுபோல குமரகுருபரரும் சமயதத்துவம், மருத்துவம், இரேகைசாஸ்திரம் முதலியவற்றையும் நன்கு தெரிந்திருந்தார் என்பதை நாம் அவரது நூல் வாயிலாக அறியலாம்.

இவரது இரேகை சாஸ்திர பயிற்சி மீனாட்சியம்மை குறம் படிக்கின்றபொழுது நன்கு புலனாகிறது. குறவஞ்சி, குறம் முதலிய நூல்களில் எல்லாம் குறத்தி தலைவியினது கையைப் பார்த்துப் பொதுவாகக் குறிசொல்லுவது வழக்கம். தலைவியினது கைகளை அறம் வளர்க்கும் கைகள், செல்வம் சேர்க்கும் கைகள் மக்களை வளர்க்கும் கைகள் என்றெல்லாம் பொதுவாகப் பாடுவாள். ஆனால் மீனாட்சியம்மை குறத்தில் தலைவியினது கையைப் பார்த்த குறத்தி குறிப்பிட்ட சில ரேகைகளைச் சொல்லி, நீ இன்ன பலன்களை அடைவாய் என்கிறாள். சிறந்த இரேகைகள் உள்ளவர்களுக்குக் கண்ணுக்குத் தெரியாத சில இடங்களில் மறு

---

*ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் நவராத்திரி திருநாளில் திருபுவனத்தில் "மீனாட்சி அம்மை குறம்" என்ற தலைப்பில் பேசப் பணித்ததின் விளைவே இக்கட்டுரை. குருமகா சந்நிதானத்தின் பொன்னார் திருவடிகளில் இதைச் சமர்ப்பணம் செய்கிறேன்.*

(மச்சம்) இருக்கும். இதையும் குறிப்பிடுகிருள். இவைகள் எல்லாம் இவரது இரேகை சாஸ்திரப் பயிற்சியை நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

குறத்தி தலைவியினுடைய கையைப் பார்க்கிருள். வியப்பு அடைகிருள். இதுபோன்ற சிறந்த கை நான் பார்த்ததே இல்லை என்கிருள். இப்படிப்பட்ட சிறந்தரேகைகள் எவர்கையிலும் இல்லை என்கிருள். உனது கையில் உள்ள தன ரேகையைப்பார் அது உனக்கு மிகுந்த செல்வத்தைக் கொடுக்கும் என்கிருள். புத்திர ரேகை நன்கு அமைந்திருக்கிறது. மக்கட்செல்வத்திற்கு குறையே கிடையாது என்று பாராட்டுகிருள். இதுமட்டுமா, இரேகைகளில் சிறந்தனவாகக் கருதப்படும் சில ரேகைகள் உண்டு. அவை சங்கு ரேகை, சக்கர ரேகை, மச்ச ரேகை, துடி ரேகை முதலியனவானகும். உன்கையில் துடிரேகை நன்ருக அமைந்திருக் கிறதுபார். நீ திண்ணமாக மதுரேசர் சொம்பொற் புயத்தில் சேர்வாய். நீ விரும்பாவிட்டாலும் இந்தரேகை உன்னை மதுரைச் சொக்கனிடம் சேர்க்கும் என்று கூறுகிருள். தலைவி மகிழ்ந் திருந்தாள். குறத்தி உனது தோளில் ஒரு (மச்சம்) மறு இருக்க வேண்டுமே என்று வினவினுள். தோளிகள் மச்சம் இருப்பதைப் பார்த்தார்கள். வியந்தார்கள் இந்தரேகை இங்கு அமைந்திருந் தால் இன்ன இடத்தில் மறு (மச்சம்) அமைந்திருக்க வேண்டும் என்பது விதியாயிற்றே; கண்டிப்பாக நீ கயற்கண் அம்மை யோடு இறைவனிடம் சேர்ந்திருப்பாய் என்று பெருமையுடன் வாழ்த்துகிருள். பாடலைப்பார்ப்போம்.

"அங்கைத் தலத்து தனரேகையளவில் செல்வம்தரும், உனது
செங்கைத் துடிதென்மதுரேசர் செம்பொற்புயத்திற் சேர்க்கும்
இங்கிப்படி புத்திரரேகை யெவர்க்குமில்லை யிப்படி தோளில்
தங்கும் மறு அங்கயிற்கணம்மை தன்னேடு இருக்கத்தரும் அம்மே"

(மீனுட்சி அம்மை குறம் - 30.)

துடி — உடுக்கை ரேகை (தமருகரேகை)

**தனரேகை:**

இந்த ரேகையை சூரியரேகை என்றும் அதிர்ஷ்டரேகை என்றும் மேல் நாட்டார் கூறுவர். இது சந்திர மேட்டில் உற்

பத்தியாகி மோதிரவிரலுக்கடியிலுள்ள சூரியமேடுவரை வந்திருக்கும். பெரும்பாலும் இது எல்லோர் கையிலும் இருப்பது அரிது. தனரேகை கையில் இருந்தால் செல்வமும், செல்வாக்கும் இருக்கும்நல்ல புகழ் உண்டாகும். நம் நாட்டு ரேகை சாஸ்திரிகள் சிலர் விதிரேகையையே - தனரேகை அல்லது அதிர்ஷ்டரேகை என்று கூறுகிறார்கள்.

**துடிரேகை :**

கையிலுள்ள கிரகமேடுகளில் சங்குரேகை, சக்கிரரேகை, குடைரேகை, துடிரேகை முதலியன தோன்றும். இவைகளுக்குத் தனிப்பலன் உண்டு. சங்குரேகை சங்கு போன்று இருக்கும். சக்கிரரேகை சக்கிரம் போன்று இருக்கும். துடி என்றால் உடுக்கை என்பது பொருள். துடிரேகை என்பது உடுக்கை போன்று அமைந்திருக்கும்.

**புத்திரரேகை :**

மக்கட் செல்வத்தை அறிவிப்பது. சந்திர மேட்டின் அருகிலுள்ள சில ரேகைகளைப் பார்த்துச் சொல்லுவார்கள்.

**மறு :**

இது கருப்புப்புள்ளிகளாகத் தேகத்தில் தோன்றும். இவை கண்ணுக்குத் தெரியாத இடங்களில் இருந்தால் யோகம் என்பார்கள். சில மறு (மச்சம்) தேமல் மாதிரி செம்மை அல்லது கருமையான நிறத்தோடு படர்ந்திருக்கும். இந்த மறுவை மச்சம் என்றும் கூறுவதுண்டு. குமரகுருபரர் தலைவியினது தோளில் மறு அமைந்திருப்பதாகக் கூறுகிறார்.

இவற்றையெல்லாம் பார்க்கின்ற பொழுது குமரகுருபரர் ரேகைசாஸ்திரி பயிற்சி உள்ளவர் என்பதற்கு வேறு சான்றும் வேண்டுமோ? சகலகலைவல்லுநராகிய குமரகுருபர அடிகள் திருவடி போற்றி வணங்குவோம்.

---

# செல்வத்துப் பயனே ஈதல்

திருமதி N. S. கமலேசுவரி அவர்கள்,
6. B கணபதி காலனி, ராயப்பேட்டை, சென்னை.

(மலர்–11, இதழ் 10–ன் தொடர்ச்சி)

அதியமான்,

"சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணுமன்னே"

என ஔவையால் புகழப்பட்டவன். அவன் மார்பிலே தைத்து அவன் உயிருண்ட வேல்,

"அருந்தலை இரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையிலும் போகி
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொல்நுண் தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்று வீழ்ந்தன்று"

என வாடுகிருள் ஔவை. புலவரும், இரவலரும் அவன் மறைவினுல் எவ்வளவு இடர்ப்பட்டார்கள் என்பதைப் பாடல் மிக அழகான நயத்துடன் சொல்கிறது.

முத்தொள்ளாயிரத்தில் மிக அழகுடன் சோழன் ஒருவனுடைய புகழ் பாடும் பாடல் ஒன்று உள்ளது. அந்தணரும், நாவலரும் பொன்னும், களிறும் பெற்ருர்கள், ஆனுல் அவன் பிறந்த நாளாகிய அன்று ஏன் சிலம்பி மட்டும் கூடிழந்துவிட்டதே என்கிருர் கவிஞர். அன்று வீடுகளைச் சுத்தமாக்கியபோது சிலம்பியின் கூடு களைந்துவிட்டது என்பதைக் கவிநயத்துடன் பாடக் காண்கிருேம்.

" அந்தணர் ஆவொடு பொன்பெற்ருர் நாவலர்
மந்தரம்போல் மாண்ட களிறூர்ந்தார் — எந்தை
இலங்கிலைவேல் கிள்ளி இரேவதிநாள் என்னே
சிலம்பிதன் கூடிழந்த வாறு " -(முத்தொள்ளாயிரம். 82)

பொன்னும், யானையும் தரும் அவன் கொடைப் பெருமையைக் கண்டு நாம் பெருமித மெய்துகிறேம்.

கம்பன் கோசல நாட்டை வர்ணிக்கும் போது ஈதலும், விருந்துமே பெண்களின் வேலை எனக் குறிப்பிடுகிருர்.

" பெருந்தடங்கண் பிறை நுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே "

என்பது கம்பன் தரும் அமுது. செல்வமும், கல்வியும் இயையும் போது அங்கு இயல்பாக ஈகை முகிழ்க்கிறது என அறிகிறேம்.

கொள்வாரிலாமையால் கொடுப்பவர்களில்லை, வறுமையில் லாமையால் வள்ளல்தன்மை இல்லை எனக்கம்பன் பாடுவதெல் லாம் அவன் கற்பனை கண்ட இலட்சியநாடு எனக் கொள்ளலாம். பரம்பெலாம் பவளமாய், வரம்பெலாம் முத்துக்களாய், மடை யெலாம் பணிலமாய், மாநீர்க் குரம்பெலாம் செம்பொன்னய்க் கொழிக்கும் நன்னட்டில் இரப்போர்க்கும் ஈவோர்க்கும் எங்கே இடம்?

" அறம் செய விரும்பு ", "ஐயமிட்டு உண்" என்று இளம் உள்ளங்களுக்குக்கூட ஈகையைப் போதித்தனர் பெரியோர் வள்ளுவரும்,

" உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க் கொன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ் "

என்று ஈகையால் பெறும் புகழைச் சிறப்பிக்கிருர். அறிவுடை யான் பெற்ற திரு ஊருணி நீர் நிறைதல் போன்றது. நயனு டையானிடம் இருந்தாலோ மரம் உள்ளூரில் பழுத்துத் தன் ஒரு பகுதியைப் பிறருக்கு ஈதலை ஒத்தது. பெருந்தகையான் கண் பட்டாலோ மருந்து மரம் முழுவதுமாய்ப் பிறர்க்கீதலை ஒத்தது'

வள்ளுவர் தன்னே வாழ வேண்டாமெனக் கூறவே இல்லை. அடிப்படையின்றிக் கட்டிடம் எங்கே? தானும் உண்டு பிறர்க்கும் தருவதே "பாத்தூண்" ஆயிற்று. "ஈத்துவக்கும் இன்பம்" என்று வள்ளுவர் கூறும் இன்பம் பகுத்து உண்பவர்க்கே கிடைக்கும். வைத்திழக்கும் வன்கணவர்க்கு ஏது? அதனுலன்றோ காதல் இன்பத்திற்கும் பாத்தூணே உவமையாக்குகிருர் அப்பெருந்தகை,

"தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றுல்
அம்மா அரிவை முயக்கு"

என்பது அவர் வாக்கு.

கொடுப்பதும், துய்ப்பதும் இல்லார்க்குப் பலகோடி செல்வங்கள் இருந்தும் இல்லாததெனவே கருதப்படும். ஈகையின்பம் அறியாதவன் செல்வம் நடுவூரில் நச்சு மரம் பழுத்ததையொத்தது. ஈகை ஒரு சிலரை வாழ்விக்க, ஒப்புரவு ஊரையும், நாட்டையும் வாழ்விக்கும். சாலையும், பள்ளியும், விடுதியும், வைத்திய சாலையும் அமைத்து நாடு புரந்த மன்னர்கள் பலரைக் கண்டது நம் தமிழகம். ஈகை செல்வர்க்கும், ஒப்பரவு பெருஞ் செல்வர்க்கும் உரியது.

"எட்டி பழுத்த இருங்கனி வீழ்ந்தன
ஒட்டிய நல்லறஞ் செய்யா தவர்செல்வம்
வட்டிகொண்டு ஈட்டியே மண்ணின் முகந்திடும்
பட்டிப் பதகர் பயன் அறியாரே"

என்கிருர் திருமூலர். ஈகையே கண்டிராதவன் செல்வம் எட்டிக் கனியால் பெறும் பயனேயே பெறத்தக்கது.

செல்வம் சேர்த்த ஒருவன் இறுதியில் அறம் செய்ய எண்ணினுன். மரணப் படுக்கையில் வீழ்ந்த பின்பு அதைப் பற்றி நினேத்துக் கொண்டிருந்தான். மனேவிக்கு அதைப்பற்றிக் கூறத் துவங்கிய போது உடலியக்கங்கள் ஒவ்வொன்ருக அடங்கிவிடவே பேச நா எழவில்லை. கையால் பணமுடிப்பைப் பற்றிக் குறிப்புக் காட்டுகிருன். அவளோ, "ஐயோ விளாம் பழமா கேட்கிறீர்கள்? உங்கள் நோய்க்கு அது ஆகுமா?" என அரற்றினுள். செல்வம் தன் பயன் இழந்தது.

"கையால் போதித்துணையே காட்டக் கயற்கண்ணுள் அதனைக் காட் டாள்
ஐயா, விளாம்பழமே என்கின்றிர் ஆங்கதற்கும் பருவம் அன்று என்
செய்கோ எனச்சிறந்தாள் போல்சிறவாக் கட்டுரையால் குறித்த எல்லாம்
பொய்யே பொருளுரையா முன்னே கொடுத்துண்டல் புரிமின் காண்டீர்"

என்று திருத்தக்கதேவர் சிந்தாமணியில் இதைக் குறிப்பிட்டுப் பாடுகின்றார். நன்றே செய்தலை அன்றே செய்தல் வேண்டும் என்பது எவ்வளவு பெரிய உண்மை! வள்ளுவரும் அன்றே அறம் செய்யும்படி கூறுகின்றார்.

இரப்பாரையில்லாத ஞாலம் மரப்பாவை சென்று வருதலை ஒத்தது என்கிறார் அவர். எனவே ஈகையும், இரவும் இருக்கும் போதுதான் உயிர்ப்பு இருக்க முடியும். எல்லோரும் செல்வராய் அல்லது எல்லோரும் இரப்போராய் வாழ்ந் தால் சுவை ஏது? கற்ற ஆசான் மாணவனுக்குக் கல்வி தருவதில் இன்பம் காண்பதில்லையா? அன்பால் நிறைந்த தாய் தன் குழந்தைக்கு அன்பைத் தருவதில் நிறைவு காண வில்லையா? இடுக்கண் உற்றபோது நண்பன் கை கொடுத்து உதவுவதில்லையா? உண்டி கொடுத்தவர் உயிர் கொடுத்தவ ரன்றோ! எனவே உலகம் உள்ள அளவும் இந்த ஏற்றத் தாழ்வு கள் எங்கே போகும்? பிறக்கும்போதே செல்வனாய் அறிஞனாய் மனிதன் பிறப்பதில்லையே! அதன் வளர்ச்சிக்கெல்லாம் பிறர் உதவி தேவைப்படுகிறது. எனவே அங்கு ஈகை விரிகிறது.

ஆசையால் சேர்த்துக் காப்பது நிலைப்பதில்லை. பகலவன் மறைவதற்குள் எவ்வளவு தூரம் ஓடுகிறானோ அவ்வளவு நிலம் பெறலாம் என்று ஒருவன் உடலே ஓயும் வரை ஓடினான். பெற்ற செல்வத்தைத் துய்ப்பதற்கு ஒரு விநாடிகூட இல்லாமல் இயற்கை எய்திவிட்டான். அவனுக்கு இறுதியில் தேவைப் பட்டதோ ஆறடி மண்! எனவே,

"உண்பதுநாழி உடுப்பவை இரண்டே
பிறவும் எல்லாம் ஒரொக்கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே"

என்று நக்கீரர் நிலையான புகழிற்கு அடிகோலுவதை நாம் ஏற் பதில் தடையில்லையன்றோ?

---

# ஒரு குறள்

திரு. T. N. மகாலிங்கம் M. A., அவர்கள்
*தமிழ் விரிவுரையாளர்*
*தெ. தி. இந்துக் கல்லூரி, நாகர்கோவில்*

உலகிலுள்ள ஒவ்வொரு நாட்டின் வரலாற்று ஏடுகளைப் புரட்டி ஆராய்கின்றபோது அறிவுடைப் பெருமக்கள் பலர் அவரவர் நாட்டில் தோன்றி தாழ்வுற்று தயங்கிய மனித சமுதாயத்தை நல்வழிப்படுத்தினர்கள் என்று அறிகிறோம். சில பெரியோர் அரசியல் தலைவர்களாக விளங்கி, விடுதலை உணர்ச்சி மக்களுக்கு ஊட்டி வீரசுதந்தரம் பெற வழிசெய்தனர். சில பெரியோர் சமய உணர்வு ஊட்டி இம்மை வாழ்வோடு மனித வாழ்வு முற்றுப்பெறவில்லை என அறிவுறுத்தி, கடவுளுணர்ச்சி ஊட்டி பெரும்புகழ் அடைந்தனர். இன்னும் சிலர் அரசியல் வாழ்வு நன்முறையில் அமைந்தாலும், சமய வாழ்வு சரியாக இருந்தாலும் மன அமைதி அடைவதில்லை. இப்பெரியோர் தனி மனிதனின் வாழ்வையே செம்மையுறச் செய்தல் வேண்டுமென்று கருதுவர். தனிமனிதனுடைய வாழ்வு சுற்றியுள்ள சூழல்களால் தாக்கப்படினும், அவன் மனநிலைக் கேற்றவாறு பண்படவும், பாழ்படவும் செய்யுமன்றோ? ஆகவே அவன் மனதில் காணும் அறியாமை இருள் நீங்கி அறிவு என்னும் ஒளிபடர பாடு படுவோரே இப்பெருமக்கள். இத்தகையோரே நாடுகளுக்கு இலக்கியங்கள் பல ஈந்த நல்லிசைப் புலவர்கள். இப்புலவர் பெருமக்கள் சமுதாயத்தில் காணும் ஏற்றதாழ்வுகளை ஆழ்ந்து நோக்கி, அதன் அமைப்பு இவ்வாறு அமையவேண்டும் என்று கனவுகண்டு நனவாக்க முயலுவர்.

இப்புலவர் பெருமக்கள் மேற்கத்திய நாடுகளிலும், கிழக்கத்திய நாடுகளிலும் பல்வேறு காலங்களில் தோன்றினர்.

